# 18
# திண்டி

**கா**வேரி கரையோரமா திண்டி நடந்து போயிட்டிருந்தான். நல்ல திடகாத்திரமான ஆளு திண்டி! திண்டின்னா என்ன? திங்கிறது! நல்லா திங்கிறவனுக்குப் பேரு திண்டி. ஜனங்களுக்கு திங்கிறவங்களை அதிலயும் நெறையா 'திண்டி' திங்கிறவங்களைப் புடிக்காது. ஆனா இந்த திண்டி மேல ஜனங்களுக்கு ரொம்ப பிரியம் வந்திரிச்சு. கல்யாணத்துல திண்டிக்குச் சோறு போடுறதுக்கு அந்த ஊர்ல எல்லாரு நா முந்தி, நீ முந்தின்னு நிறைய பேர் சோத்தக் கொண்டாந்து அவனோட இலையில கொட்டுவாங்க! அவனும் சாத்துக்குடி பழம் சைஸுக்கு ஒரு ஒரு உருண்டையா உருட்டி, உருட்டி உள்ள தள்றது. பாக்க அழகாயிருக்கும். ஆனா, ஜனங்க கேலியா சிரிக்கும். திண்டிப் பயல் பொடியனா இருந்தப்பவே அவனை ஊர் பொதுவுல உட்டுட்டு செத்துப் போய்ட்டா அந்த ஆயி. அவ கள்ளப் பொம்புள அதனாலதான். இந்த ஊர்ல திண்டி சோறு திண்ணு திண்டியா வளர முடிஞ்சுது. அய்யோ பாவம் கள்ளப்புள்ள. ஆயி போய்ட்டா. யாராவது ஏங்கனு கள்ள ஊட்டு புள்ளயா? - ச்சே!'' அப்படின்னு கள்ளப் பொம்பளயெல்லாம் ஆளுக்கொரு உருண்டையா போக வர திண்டிப் பயலுக்கு ஊட்டி விட்டு, அவனும் கஷ்டம் தெரியாம திமுதிமுன்னு வளந்துட்டான். எட்டு வயசுல இருபது வயசு உடம்பு வந்துட்டுது அவனுக்கு! திண்டி நிமிந்துட்டான். என்ன செய்யிறது? திடீர்னு அவனுக்குப் போட்ற சோத்த எல்லாரும் நிறுத்திரு வாங்கன்னு திண்டி மட்டுமுல்ல, ஊர்ல யாருமே எதிர்பார்க்கல. திண்டி சும்மா சாப்டல. ஒவ்வொரு வீட்டிலயும் காட்டு மாடு மாதிரி வேலய இழுத்து செஞ்சுப்புட்டுத்தான் சோறு திம்பான். எல்லாரப் பத்தியும் அவளோட, இவளோட தொடுப்பு அப்படின்னு ஒவ்வொருத்தரப் பத்தியும் புரளி உண்டு. ஆனா, திண்டிப் பயலப் பொறுத்தவரைக்கும் எல்லாப் பொண்டுவளுக்கும் மோகம் கொள்ள வைக்கிற தோற்றம். அவன் பதினாறு வயதில் பெரிய ஆம்பளையாகியிருந்தான். அவனப் பாத்ததும் எந்த வீட்டு கதவாயிருந்தாலும் திறந்துக்கும், எந்த வீட்டுல வேணும்னாலும் அவன் போயி அவன் இஷ்டத்துக்கு சாப்பிட முடிஞ்சிது. அதானலேயே திண்டின்னு பேர் கிடைச்சது. திடீர்னு ராயர் ஊட்ல கொல்லையிலிருந்த மண் சுவர் விழுந்துட்டுது. திண்டி கூப்பிட்டா அரை நாள்ள மதிச்சுவர் வைச்சிருவான். அப்டின்னு ராயர் மாமிக்குத் தெரியும். ஊர்ல எந்த பெரிய வேலையும் கூலியில்லாம செய்யிற ஒரே ஆள் திண்டிதான். எல்லாம் திண்டிக்குப் பதினெட்டாவது வயது வர்ற வரைக்குந்தான். திண்டிப் பயலுக்குச் சம்பளம் வேற கொடுக்கணுமா? சோறு போட்டா போறாதா? அப்டின்னு ஊர் பொம்பளைங்க சோத்தப் போட்டு சொல்லாம வேலை வாங்கிக்குவாளுங்க.

ஆனா திண்டி யாருக்கும் தேவையில்லை. திடீர்னு ஊர் முச்சூடும் திண்டிக்குச் சோறு போட்றதே அதிகம் அப்டின்னு நினைக்க ஆரம்பிச்சுட்டாங்க. திண்டிக்குச் சோறு போட்டு யாரும் வளக்கல. ஆனா அதே சமயத்துல எல்லாரு சோத்தையும் சாப்புட்டுதான் திண்டி வளந்தான். ஆனா, சோத்த தவிர அவனுக்கு வேற எதையும் ஜனங்க சொல்லித் தரல. அதுக்காக அவன் கவலப்படவும் இல்ல. கொஞ்சம் கொஞ்சமா அவன் ஒடம்பு வளந்தப்ப அவனுடைய புத்தியும் வளந்தது யாருக்கும் தெரியுல. திண்டி திண்ணு திண்ணு மட்டிப் பயலா போனான். அப்படின்னுதான் எல்லாரும் நினைச்சுக்கிட்டு இருந்தாங்க. ஊர்ல புள்ளயுவோ ஏதாவது படிக்கலன்னா, சொன்னத கேக்கலன்னா, திண்டிக்கிட்ட புடிச்சு கொடுத்துருவேன் பாரு அப்படின்னு சொல்லி மிரட்டுவாங்க. ஆனா திண்டி அப்டி பயப்பட்ற மாதிரி ஆளுயில்ல. திண்டி எடுத்துட்டுப் போயிருவான்; திண்டிக்கிட்டே குடுத்துருவேன்; திண்டியவுட்டு உதைக்கச் சொல்வேன்; பாரேன் திண்டிப் பய திங்கற மாதிரி திங்கிறான். திண்டிப் பய மாதிரி உருப்புடாம போறத்துக்குத்தான் நீ இருக்கே; நீ திண்டிப் பயல கட்டிக்கிறதுக்குத்தான் லாயக்கு - அப்படின்னு ஊர் பூரா ஒட்டு மொத்தமா அவன் சுத்தமா ஒண்ணுக்கும் லாயக்கு இல்லாதவனா ஆக்கிடுச்சு. தீடீர்னு சொல்லி வச்சாப்புல திண்டிக்குச் சோறு போட்றத நிறுத்திட்டாங்க. ஏன்னா, திண்டி இன்னும் ஜாஸ்தியா திங்க ஆரம்பிச்சிட்டான். அவன் எப்போதும் போல எல்லா இடத்திலும் சாப்பிடப் போனான். ‘இனிமே இங்கே வராதடா திண்டி! இனிமே சோறு போட முடியாது’ அப்டின்னு எல்லா வீட்டிலயும் சொன்னப்பக்கூட திண்டிக்கு கஷ்டமோ, வருத்தமோ, அவமானமோ தோணல. ஏன்னா, அவன எல்லோருமே அவமானம் பண்ணுவாங்க. அவமானத்துக்கு என்ன அர்த்தமுன்னு அவனுக்குத் தெரியும். ரோசம், மானம் எல்லாம் காசு உள்ளவங்களுக்குதான் அப்டிங்கிறது திண்டிக்கு நல்லாவே தெரியும். அதுனால பத்து வீடு கேட்டு பத்தாவது வூட்லதான் சரி தொலையிதுன்னு சோறு போடுவாங்க.

சின்னப் புள்ளயா இருந்த காலத்துல எல்லாருமே போட்டாங்க. காலம் ஆக ஆக தேஞ்சுகிட்டே வந்து, இப்ப நிரந்தரமா இல்லன்னு ஆயிரிச்சு. திண்டி தெணற ஆரம்பிச்சான். சாப்பிட்ட வயிறு திடீர்னு சாப்பிடாமல் முழுப் பட்டினியா இருப்பது என்றால், அது என்ன என்று திண்டிக்குத் தெரியாது. ஆகப் பசி தெரிய ஆரம்பிச்சுது. இதுவரைக்கும் ருசி தெரிஞ்சதுல்ல. யார் எதப் போட்டாலும் எவ்வளவு போட்றாங்க அப்டிங்கிறதுதான் திண்டிக்கு முக்கியம். இப்ப போடறவங்களே இல்லைன்னு ஆயிபோச்சு. ஊர் பஞ்சாயத்து, ஆலமரம், குளத்தாங்கரை, மூங்கி குத்து, கோயில் மரத்தடி... இப்டி கண்ட கண்ட இடத்துல பட்டினியாய் சுருண்டு கிடந்தான். சோறு இல்லாததுனால வேலயும் இல்ல. திண்டிக்கு எதுனால் அப்டின்னு ரொம்பநாள் முந்தியே தெரியும். பத்து நாளா அவனுக்கு யாரும் வேல சொல்லல! பத்து நாள் இருபது நாளாச்சு. வாள் கத்தியாரு வீட்டு தென்னந்தோப்புல ஐம்பது எளனிய ஒரே நேரத்தில வெட்டிக்குடிச்சான். அங்கிருந்து போற வழியிலே அண்ணாமலை ரெட்டியாரு வாழைக்கொல்லையிலிருந்து முப்பது தார் வாழக்காய

வெட்டிக்கிட்டுப் போய் சந்தையில வித்துப்புட்டான். படுகையில இறங்கி வெத்தலக் கொல்லை யிலிருந்து ஐம்பது கவுளி வெத்தல, கர்ணக் கிழங்கு வெட்டி குமுச்சு கிடந்ததிலிருந்து இரண்டு வண்டி கிழங்கு காணும், அறுபது கிலோ வெண்டைக்காய், இன்னும் கண்ணுக்கெட்டுன தூரத்திலிருந்து மாங்காய், தேங்காய்ன்னு இப்டி ஏகப்பட்ட அழிமானம் செய்தான் திண்டி! ஊர் கிடுகிடுத்துப் போய்ட்டு! யார் இதையெல்லாம் செய்தார்கள் என்று யாருக்கும் தெரியாது. அடுத்தநாளே செட்டியார் வீட்டு மாந்தோப்புல இரண்டு லாரி மாங்காய் காணும். 'ஒரு மனுசன் செய்யிற வேலையா இல்லெ இதெல்லாம்' என்று ஊர் பூரா இதே பேச்சா இருந்தது. பகல்லயே நாயக்கர் வீட்டு அம்மா, கொல்லையில இருந்த பத்து சுரக்காயும் கொல்லையில கட்டிக் கிடந்த கன்னுக்குட்டியையும், தாய் பசுவையும் காணுமாம். ஊரே அல்லோல கல்லோலப்பட்டுக்கிட்டு இருந்தது. யார் செஞ்சிருப்பாங்கன்னு ஒருத்தருக்கும் புரியல. அழி மானம் ஏகதாறா ஆயிட்டதுனா, துப்பு தொலக்குறவங்க ராமைய்யா, சோமய்யா இரண்டு பேரயிந்தான் கூப்பிடுவாங்க. இரண்டு பேரும் விண்ணாதி விண்ணனவ! துப்பு தொலைக்குறதுல சுத்துப்பட்டு நத்தம் - நீச்சு நாப்பது, அம்பது கிராமங்கள்ள எது காணாமப் போனாலும் என்னா அழிமானம் நடந்தாலும் சோமய்யா, ராமைய்யாவத்தான் துப்பு தொலக்கக் கூப்புடுவாங்க. சோமய்யா மேல்வாரதுப்பும், ராமைய்யா அடிவாரத்துப்பும் கண்டுபிடிப்பாங்க. காலடி அடையாளம் இது மாதிரி கண்டு பிடிக்கிறது மேல்வார துப்பு. காணாமப்போன பொருளுடைய நிறம், உருவம், பருவம், பாத்தவங்க கண்குறி, கேள்விகுறி இதையெல்லாம் வச்சு கண்டு பிடிக்கிறது அடிவார துப்பு! அன்னைக்கு ராத்திரியே சோமய்யா வூட்டு இலுப்ப தோப்புல இலுப்ப எண்ணெய் ஆட்டுவதற்காக வச்சிருந்த இலுப்பங்கொட்ட அம்பது அறுபது மூட்டை வயல்வூட்ல இருந்த அரிசி மூட்டை எல்லாம் ஒரே முட்டா காணாமப் போச்சு. சோமய்யாவும், ராமைய்யாவும் வய்த்துலயும், வாயிலயும் அடிச்சிக்கிட்டாங்க. துப்பு பாக்க போக முடியல. ஏன்னா அநியாயமா இருக்கு. ஊர்ல ஒரு ஊடு பாக்கியில்ல. ஒரு நாளக்கி ரெண்டு ஊடுன்ற கணக்கில நெதேய்க்கும் அழிமானம் தொடர்ந்து நடந்துகிட்டேதான் இருந்தது. சோமய்யா, ராமய்யாவால துப்பு சொல்லவே முடியலே. ஏன்னா துப்பு சொன்னா? அன்னைக்கே ராமைய்யா ஊட்டுக்கு ஒரு ஆயிரம் ரூபாய்க்கு ஒரு 'அக்குறும்பு' நடக்கும். அம்பது, அறுபது வயசுல இப்டி ஒரு நீக்குப் போக்கான ஒரு திருடன சோமய்யா பாத்ததே இல்லே. கேட்டதும் இல்லெ- அப்டின்னு சொன்னான். வெளியூர் கிராமத்திலிருந்து புதுசா துப்பு தொலக்குறவங்க வேவு பாக்கிறவங்க நாலு பேர் வந்தாங்க. ஒண்ணும் பாச்சா பலிக்கலே! திருடன் வந்த வழியெல்லாம் வேவு பாக்கிறவங்க குறி பாத்துக்கிட்டு இருக்கும்போது வேவு பாக்கிறவனுடைய சொந்த ஊர்ல இருந்து ஆள் வரும்! "அய்யா, ஒங்க ஊட்டு கொல்லயில பத்து பலா மரத்திலயெல்லாம் இருந்த அறுபது, எழுபது பலாப் பழமும் 'அவுட்டு,' ஊரே 'குபாரா' கிடக்கு. வாங்க! ஓடியாங்க... இப்டி, அய்டியாக்கார திருட்டுத்தாயழிய, நான் எங்கயும் பாக்கலங்க!' என்று வந்த வெளியூர்காரனுவ சொன்னானுவ. என்னா பண்றதாம்.

திண்டி மேஞ்சேரி சரோஜா ஹூட்டு பூக்கொல்லையிலிருந்து ஓடிப்போனதா ஆட்டுக்கார வெங்குடு சுப்பன் தகவல் கொண்டாந்து கொடுத்தான். மேல ஹூட்டு ராயர், அய்வேலி வாள் சுத்தியார், அண்ணாமலை ரெட்டியார், ஒந்திரியார், கண்டபுள்ள, தங்கராயர், மாதண்டார் எல்லா தலக்கட்டு ஆளுவளும் ஒண்ணாக்கூடி பஞ்சாயத்து வைச்சு பேசினாங்க, பஞ்சாயத்துக்கு திண்டியும் வந்து உட்கார்ந்து இருக்கான். ஆள் இப்ப விசிறாப்பா இருக்கான். கர்ல கர்லயா முந்தி மாறியே சத வச்சுடுச்சு. 'பஞ்சாயத்துல அவன கூப்ட்டு விசாரிக்கப் போறாங்'க அப்டின்னு ஒரே பேச்சாயிருந்தது. ஆனா எல்லாரும் கூடுனவுடனே எல்லாருமே ஆங்காரமாய் கத்திக்கிட்டு இருந்தாங்க. ஆனா யாருக்கும் அவனைக் குத்தம் சொல்ல முடியலெ. எந்தத் துப்பும் இல்லெ. எந்த ஆதாரமும் இல்லாம அவன எப்டி கிட்டில போட முடியும்? எப்படியாவது அவன மாட்டிப்புடணும்னு எல்லாருக்கும் இருக்கு. எல்லார் ஊட்டு கொல்லயிலயும், எல்லார் ஊட்டுக்குள்ளேயும், உள்ளாரெயெல்லாம் பூந்துவர்ற ஒரே ஆளு நம்ப திண்டிதான்! அவன்தான் எல்லா அழிமானத்துக்கும் திருட்டுக்கும் எத்துவாளித்தனத்துக்கும் காரணம். இந்த ''பாவி விளங்குவானா, நாசமத்து போவ, பேதில போவ'' என்று ஊர் பெண்களெல்லாம் கும்பல் கும்பலாய் நின்னு திண்டிப்பயலயே பாத்துட்டு இருந்தாங்க.

கடைசில வாள் சத்தியார்தான் வயித்தெரிச்ச தாங்கம கத்த ஆரம்பிச்சாரு. ''யாராவுது என்னோட வாங்க போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவணும். இனிமே பஞ்சாயத்துல பிரயோஜனம் இல்லை. எல்லாரும் ராத்திரி பகலா காவல் கூட இருந்து பாத்தாச்சு. எல்லாரப் பத்தியும் நல்லா தெரிஞ்ச ஏதோ ஒரு திருட்டு நாய்தான் இந்த அழிமானம் பண்ணுது. எங்க ஊட்டு அடுப்பாங்கரை வரைக்கும் வந்து உங்கிறதிலேயிருந்து, திங்கிறதிலேயிருந்து நக நட்டு வரைக்கும் எல்லா திருட்டும் செஞ்சவன இனிமேலும் கோயில் காளை மாறி விட்றதுக்கு நான் ஒண்ணும் இளிச்சவாயன் இல்ல. பஞ்சாயத்து சும்மா பேசி தீக்கதான். வேற ஒண்ணும் பிரயோஜனம் இருக்காது. அதனால நான் போலீஸ் ஸ்டேஷனுக்கு போறேன். நீங்கள்லாம் வந்தாலும் சரி, வல்லன்னலும் சரி; யார் கேட்டாலும் சரி; நம்ம ஊட்டு சோத்த தின்னப் பய அவன எல்லாருக்கும் தெரியும். ஆனா அடையாளம் காட்ட முடியாது. ஏன்னா துப்பு இல்லை. துப்பு கெட்டவங்கதானே நம்ப எல்லாரும்'' என்றார். அதுக்குள்ள அண்ணாமலை ரெட்டியார் எந்திரிச்சு ''வாள் சுத்தியாரே! போதும் நிறுத்துங்க. உள்ளூர்ல அடங்காத மாடு வெளியூர்ல அடங்காமலா போயிடும். போலீஸ் வந்து ஊட்டு ஊட்டுக்குமா ஏறி பொண்டுவ புள்ளைய விசாரிச்சானுவோன்னா எல்லாத்தையும் கக்கிருவாளுவ! அவளுவ சரியா இருந்தா துப்பு கிடைக்காமலா போவும்?'' என்று கன்னபின்னா என்று கத்தினார் ராயர் எந்திரிச்சு. கூட்டத்துக்கு வெளியில இருந்து பஞ்சாயத்துக்கு வெளியில இருந்து யாரோ கத்தினாங்க. முத்துப் பண்டிதர் ஹூட்டு வாழத்தார. 'சப்ஜாடா' யாரோ வெட்டி எடுத்துட்டு போயிருக்காங்க. ஆனா திண்டிப்பய இங்கதான் இருக்கான்.

பஞ்சாயத்து கூட்டத்துல பஞ்சாயத்து முழுவதும் கொல்லுன்னு ஆயிடிச்சி. திமுதிமுன்னு கூட்டத்துள்குள்ளேயிருந்து முத்து பண்டிதர் எந்திரிச்சி ஓடியாந்து ''நீ நல்லா இருப்பியா, நீ விளங்குவியா அயோக்கிய பயலெ! ஒன்ன என்னா பண்றது. இந்த தெய்வந்தாண்டா ஒன்ன கேக்கும்'' என்று கதறி கதறியபடியே அவன் மேல் பாய்ந்தார். ஒரே விசிறலில் தூரப் போய் விழுந்தார் முத்துப் பண்டிதர். கூட்டத்தின் நடுவே எல்லோரையும் பார்த்து நிமிர்ந்து நின்றபடி திண்டி,'' ஆள் பாத்திங்களா, திருடன்னு சொல்றதுக்கு ஆதாரம் ஏதாவுது இருக்கா? நீங்க எல்லாருமா சேர்ந்து என்னைத் திருடனாக்க முடியாது. போலீஸ் வந்தாலும் சரி நான்தான் திருடங்கிறதுக்கு ஆதாரம் ஒங்ககிட்ட கிடையாது. ஆனா நீங்கயெல்லாம் என்னதான் திருடன் திண்டிப்பயன்னு அவங்க கிட்டயும் சொல்லுவீங்க. ஆனா யார் வந்தாலும் சரி எனக்கு அக்கறை இல்லெ. ஆனா என்னப் புடுச்சுபுடலாம்ன்னு மாத்திரம் நெனக்காதீங்க'' என்று கத்தினான் திண்டி.

செத்த நேரத்துல பஞ்சாயத்து கூடாமலேயே கலைந்தது. ஆனா அன்னக்கி ராத்திரியே துப்பாக்கி வேட்டுப் போட்ற ஆளுங்க நாலு பேரெ கொண்டாந்துட்டாரு அண்ணாமலை ரெட்டியார். இலை அசஞ்சா போதும் டமீர்! டமீர்ன்னு! ராத்திரி துப்பாக்கியால சுட்டாங்க. எங்க பாத்தாலும் வெடி மருந்து வாசனை புகை! சின்னப் புள்ளயெல்லாம் பொண்டுவளோட போய் அடங்கீடுச்சுவோ. தெருவெல்லாம் வெறிச்சோடிக் கிடக்கு. ஆனாலும் அன்னைக்கு கூட திருட்டு நடக்காம இல்லெ. திண்டி சவுக்கண்ட்லதான் படுத்திருந்தான். பத்துபேர் திண்டிக்கு காவல் இருந்தாங்க. ஆனா உச்சி உரும வேளையில எப்படி உஷ்ணம் தாங்குமோ, உச்சி உருமத்துல எப்படி வேத்துக் கொட்டுமோ அது மாதிரி இது கோடை ராத்திரியாச்சே புழுக்கம் தாங்குமோ? எல்லாரும் சவக்கண்டி மேடையிலயிருந்து குளத்தங்கரை ஓரமா காத்தாட மணல்ல போய் கிடந்தாங்க. அந்த நேரம் பாத்து ரொம்ப நாள் சிங்கப்பூர்ல் இருந்துட்டு வந்த வாள்சுத்தியார் மருமகன் வூட்ல ஒரு மின்னல் அடிச்சுது அவ்வளவுதான். குளிக்கிற முத்தத்துல இருந்து அடுப்பாங்கரை வரைக்கும் இருந்த வெள்ளி சாமான், வெள்ளி அரிவாள்மனை வரைக்கும் எல்லாம் காணாமல் போச்சு. உடனே அதே மின்னல், வேறொரு வீரன்னத் தேவர் வூட்டு முன்னாலயிருந்த சந்தன மர ஊஞ்சல் திடீர்ன்னு காணாமல் போச்சு. அதே மாதிரி விடிய விடிய ஏழெட்டு பத்து முக்கியமான ஊர் பெரிய மனுசாங் வீட்டுலல்லாம் அதே மின்னல் இடியோட திண்டி! அங்கே தோன்றி மறஞ்சாலும் காய், கறி, பண்டம், பாத்திரம், பழம், பழைய இரும்பு இப்படி எதுவாயிருந்தாலும் அப்படியே மறஞ்சு போயிட்டேயிருந்தது. விடிஞ்சிதான் எல்லாருக்கும் திருட்டு அது அப்படின்னு தெரிஞ்சுது. எப்படி எடுத்துக்கிட்டுப் போறான்? ஆள் அம்பு உதவியில்லாம எல்லா சாமானையும் எப்படி செலவுல்லாம விக்கிறான். அப்படின்னு யாராலயும் கண்டுபிடிக்க முடியலெ. சொல்வது மாதிரியே வாள் கத்தியார் போலீஸையும் கொண்டு வந்துட்டாரு.

போலீஸ்காரங்களும், இன்ஸ்பெக்டரும் கிராமத்த சல்லடை போட்டுச் சலிச்சாங்க. கேள்வி மேல் கேள்வி கேட்டாங்க திண்டிய! கொண்டு போய் குறுக்கும் மறுக்குமா விசாரணை பண்ணினாங்க. ஒன்றும் தேறல! ஆனா ஊர்க்கு வெளியேயிருந்த முசாரி பங்களாவுல நிறுத்தி வச்சிருந்த இன்ஸ்பெக்டரோட ஜீப் கார் மின்னல் வெட்டிய நேரத்துல காணும், திண்டிக்கி எப்படி ஜீப் கார் ஓட்ட தெரிஞ்சுது? காவலுக்கு அங்க நின்ன நாலு போலீஸ்காரங்களையும் கண்ணில மண்ண தூவிட்டு எப்படி ஜீப்ப அவனால கொண்டு போக முடிஞ்சுது? போலீஸ்காரங்களுக்கும் திண்டியப் பாக்க பயம்மா இருந்தது; ஏன்னா கையும் மையுமா அவனைப் புடிக்க முடியலெ. முடியாது அப்படிங்கிறதும் அவனப் பார்த்ததுமே தெரிஞ்சிக்கிட்டாங்க.

சாதாரணமா பெருந்தீனி திங்கிறவங்களுக்குப் பொதுவா சுறுசுறுப்பு இருக்காது. கூர்மையான அறிவு இருக்காது. சமயோசிதமா எந்தக் காரியமும் செய்ய மாட்டாங்க. ஆனா இங்க திண்டி அதுக்கு நேர் எதிர்மாறா இருக்கிறத இன்ஸ்பெக்டர் பாத்தார். திண்டி ஏராளமா திங்கிறத்தான் பாக்க முடிஞ்சதே தவிர அவன் திருடுறதெ பாக்கவே முடியலெ! கன்னா பின்னான்னு திங்கிறவங்க கிட்ட இருக்கிற மந்த புத்தி திண்டிகிட்ட இல்ல. மின்னல்தான். மின்னல் வெட்ற நேரத்துல யாரும் கண்டு பிடிக்க முடியாம எல்லாரும் திகைச்சு நின்னுருக்கும்போது ஒரு ஊரையே கூட திண்டியால தூக்கிக்கிட்டு போயி ஒளிச்சு வச்சு வித்துட முடியும்.

போலீஸ்காரங்க அந்த ஊர் பொம்புளயள கூப்பிட்டு விசாரிச்சப்ப எல்லாம் ஒரே முட்டா ‘திண்டி இல்லங்க இதுக்கெல்லாம் காரணம்! அவன் நம்பூட்டு புள்ள’ அப்படின்னு சொல்லிட்டாங்க. போலீஸ்காரங்களுக்கு இப்படி தண்ணி காட்டினதோட அவங்க ஜீப்பயே அபேஸ் பண்ணி அமுக்கிப்புட்டான் திண்டிப்பய! அவங்களால ஒண்ணும் பண்ண முடியலெ. அதே மாதிரி அவனைப் புடிக்கவும் முடியலெ. புடிக்கச் சாட்சியும் இல்லெ. போலீசும் கிராமத்தவிட்டு போய் சேர்ந்திரிச்சு. திண்டி வழக்கம்போல இன்னும் வேகமா அழிமானத்த தொடங்கிவிட்டான். மறுபடியும் ஆக்ரோஷமா எல்லாருமா பஞ்சாயத்துக் கூடுனாங்க. திண்டிய விசாரிச்சாங்க! மறுபடி, மறுபடி திண்டி வந்து பஞ்சாயத்துல உக்காந்தான். பொண்டுவோள்ளாம் சிரிச்சதுவோ! திரும்பத் திரும்பத் திருட்டு போயிட்டேதான் இருந்தது.

அப்போ ஒரு நாளு வாள் சுத்தியாரு ஊட்டு நந்தவனத்தில் உள்ள கிணத்துல இஷ்டம்போல நொளைஞ்சு குளிச்சிக்கிட்டுயிருந்தான் திண்டி. மேல கிணத்து விளிம்பில அண்ணாமலை ரெட்டியார் தலை தெரிஞ்சுது. ‘‘மேல வாப்பா ஒங்கிட்ட ஒரு விஷயம் பேசணும்.’’ அப்படின்னு கிணத்துக்குள்ள எட்டிப் பாத்து ரெட்டியார் கூப்பிட்டார். மேலேறி நிதானமா திண்டி வந்தான். ‘‘இப்படியே காலத்த கழிச்சரல்லாம்னு நெனக்கிறிய? அது முடியுமா திண்டி! என்னமோ பெருமாள் வுட்ட வழி. உனக்கும் கையும் காலும் கர்ண கர்ணமா பெருமாள் கொடுத்திருக்கிறாரு. இனிமே இப்படியே இருந்திடலாம்ன்னு நெனைக்காதே! கொடுத்த பெருமாள் பறிச்சுக்கவும் செய்யும். ஊர் உலகத்துல

ஒன்னப்போல திண்டு முண்டனா இருந்தவங்க ரொம்ப பேர பாத்திருக்கேன். ஏதோ ரெத்த திமிர்ல இப்ப தொடையைத் தட்டிக்கிட்டு மனம்போன போக்கெல்லாம் போகப்புடாதுடா அய்யா! இந்த உடம்பு உனக்கு எப்ப சரியுமுன்னு ஒனக்கே தெரியாது. நான் ஒனக்கொரு நல்ல ஏற்பாடு பண்றேன். இப்படியே நீ இருந்தா வீணாப்போகும். அதுனால நான் சொல்றத கேளு. ஒங்கையில இப்ப நிறைய காசு இருக்கணும். இருக்கு. அது எந்த வழியில வந்த்தா இருந்தாலும் சரி காப்பாத்திக்க. இந்த ஊர் கள்ளப் பயலுவ எல்லாரையும் சரிக்கட்டி ஒரு கள்ளகட்டிய ஒனக்கு கட்டி வைக்க வேண்டிய வேல என்னது'' என்று சொல்லிவிட்டு திண்டியின் பதிலை எதிர்பாராமல் பேச விட்டால் மாறி விடுவானோ என்று பயந்து கொண்டே வேக வேகமாக ஓடுவது போல் நடந்தார் அண்ணாமலை ரெட்டியார். திண்டிக்கு என்னா பதில் சொல்றதுன்னே தெரியலெ. அங்கிருந்து ரெட்டியார் நேராக வாள் சுத்தியார் வூட்டுக்கு போய் திண்ணையில ஏறி உள்ளே நுழைந்தார்.

''இன்னிக்கி நம்ம வூட்ல கை வச்சுருக்கான் திண்டிப்பய. கீரக்கொல்லையைக் கூட உடல. அழிமானம் திரும்பியும் ஆரம்பிச்சுட்டான்.''

''அடா உடுங்க புள்ள. பயல அமுக்கிப் போடறதுக்கு ஒரு வழியோட வந்திருக்கேன். ஊருக்கு அடங்காத திண்டு முண்டு பசங்கள அடக்குறதுக்கு, ஒரே ஒரு வழிதான் இருக்கு. எங்க தாத்தா கூட இப்படித்தான் இருந்தாராம். அப்புறமா ஒரு சரியான பொண்ண பாத்து கட்டி வச்சாங்களாம். தாத்தா சர்வநாடியும் அடங்கிப் போய் சாதாரணமான ஆளா போய்ட்டாராம். திண்டிப் பயலும் அதே மாதிரி சுத்தமா அடங்கி நமக்கு அடக்கமாயிடுவான் பாருங்களேன்'' என்றார் அண்ணாமலை ரெட்டியார்.

''அட இவனுக்கு பொண்ணு கொடுத்து இவன அடக்குறதுக்கு யார் கிட்ட பொண்ணு இருக்கு?''

''அடா நீ வேற! ஊர்ல பொண்ணா இல்ல, ஒம் பொண்ணையும், எம் பொண்ணையுமா கொடுக்கப் போறோம்? இல்லை நமக்கு பொண்ணுதான் இல்லயா? பயல அடக்கிறதுக்கு சரியான பொண்ணா வேணும். சுப்பிரமணிய ஆதிரியார் வூட்டுப் பொண்ண பார்த்திருங்கீங்களா. நல்லா திமுதிமுன்னு கோயில் காளையாட்டம், அராபிரேஸ் குதிரையாட்டம், இழுத்துக் கட்டின கோயில் கொடி யேத்த கம்பம் மாதிரி எடுப்பா இருப்பா. பாத்ததில்லெ?''

''என்னமோ செய்யி! நானும் ஆமான்னு சொல்லிட்டுப் போறேன். எனக்கென்ன எப்படியாவுது திண்டிப் பயல ஒடுக்கினா போதும்.''

''இப்ப சரின்னுட்டு அப்புறம் இல்ல அது இதுன்னு ஊர் மத்தில வந்து ஓளற ஆரம்பிச்சன்னா நம்ப மானம்தான் போவும். ஆமா சொல்லிப்புட்டேன். ஏன்னா பய லேசுபட்டவன் இல்லெ. எதுக்கும் துணிஞ்சவன். ஊர்ல பாதி அவம்பக்கம் இருக்குதுவோ. இதுவள கோட்டவுட்டா அப்பறம் அதோ கதிதான்'' என்றார் ரெட்டியார். நடக்கிறத யாரும் தடுக்கல. சமஞ்சு பதினஞ்சு வருசமா அந்த ஆதிரியாரு வூட்டுப் பொண்ணு கமலம்பாள். யாரும் பொண்ணு கேட்டு வரல. பொண்ணு நல்ல அழகு. கருகருன்னு சுருட்டை

சுருட்டையா தலைமுடி பின்னங்கால் வரை நீளும். ஆனா பார்க்கிறவங்களுக்கு பறிச்சு திங்கிற மாறி அழகா இருந்தாலும் கமலம்பாள கட்டிக்கிறதுக்கு யாரும் தயாராய் இல்லெ. காரணம் ஆதிரியார் சொத்தையெல்லாம் உட்டுப்புட்டு ஏறத்தாழ, தெருவுல நிக்கிறார். கமலம்பாளோட இன்னும் நாலு குட்டிங்க கல்யாணத்துக்கு பெரிசா வணும்ன்னு காத்திருக்கு. ஊருக்கே தெரியும். இப்ப திண்டிக்கி கிடைக்கப்போற திண்டிதான்! கமலம்பா திண்டிதான்!

பொண்ணு பாக்கிறதுக்கு திண்டிப்பயல ஆள்வுட்டு கூப்பிட்டாங்க. இடிஞ்ச கோவில்ல பெருமாளோட மேல விதானத்திலதான் திண்டி எப்பவும் படுக்கிறது. தூங்கிறது, எல்லாம். மேல எப்பவும் இருக்கிற மாதிரியே இருக்கும் அவன தேடி ஆள் போனப்ப அங்க அவன காணும். ஆனா அதே நேரத்தில் சிங்கப்பூரார் ஆட்டு கரும்பு தோட்டத்துல அழிமானம் பண்ணிக்கிட்டு இருந்தாரு நம்ப 'திண்டியாரு! அதுவும் எப்படியோ பராபரியா காத்தில வாள சுத்தியார் காதுக்கும், அண்ணாமலையார் காதுக்கும் வந்து விழுந்தது. எல்லா ஆள் அம்போட அங்க போய் சேர்ந்தாங்க. கமலம்பாளும்; பொண்ணுவளோட போனா. பொண்ணுவளுக்கெல்லாம் ஏதோ 'கிருஷ்ணன் லீலை' மாதிரி ஒரே சந்தோஷம்! திண்டிப் பயல் எது செஞ்சாலும் அதுவளுக்கு சரிதான். ஏன்னா தெருவுல போறவனே ''ஏ திண்டி! இந்த கொடி ரோஜா உச்சில பூத்திருக்குப் பாரு. அத பறிச்சுக் குடுத்துட்டுப்போ'' அப்படின்னு தைரியமா கூப்பிடுவாளுவ. அடுத்த நிமிஷம் கை நிறைய கொடி ரோஜா பூவுங்களையெல்லாம் பறிச்சுக் கொடுத்துட்டுத்தான் அடுத்த வேல பாப்பான். அங்க வேலி ஓரமா இருந்த வேப்பம் மரத்துல உக்காந்துட்டு ஒரு பல் குச்சியால பல்லு தேச்சுக்கிட்டே இவங்கள எல்லாம் பாத்து திண்டிப் பய-

''என்னா மாமூ எல்லாரும் ஒரு முட்டா வந்திருக்கிய, என்னா சங்கதி'' என்று கேட்டான். ''என்னா ஆச்சு? ஏ இப்படி எல்லாரும் பேந்தப் பேந்த முழிக்கிறீங்க. கரும்பெல்லாம் காணா போச்சுன்னா. அதெல்லாம் எங்கயும் போயிடாது இங்கதான் இருக்கும். நீங்க நடந்துகிற நடப்புல இருக்கு அது கிடைக்கிறது'' என்று உறுதியாக சிரித்தான் திண்டி! 'இன்னும் என்னென்ன ஆக்கினைக் கெல்லாம் உட்படணுமோ யாருக்குத் தெரியும்?' அப்படின்னு ரெட்டியாரும், வாள் சுத்தியாரும் பயந்துகிட்டு ''ஒண்ணுமில்லைப்பா! நாங்கதா உனக்கு கண்ணாலம் பேசிக்கிட்டு இருக்கோம். நீ என்னடான்னா கருப்பங் கொல்லையில வந்து நிக்கிற. நல்லதுக்கோ கெட்டதுக்கோ உனக்கு ஏதோ அதா இந்த கமலம்பாள் ஒனக்கு புடிச்சிருக்கா? ஒனக்கு பொண்ணு புடிக்குதா...''

''ரெட்டியாரே நீங்க சொன்னா சரி! எடோய்! கரும்பு எடுங்கடா. ரெட்டியாருக்கு கரும்பு வேணுமாம்'' என்று கத்தினான் திண்டி! அப்படியே ரெட்டியார் பக்கம் திரும்பி ''என்னா ரெட்டியாரே பயமுறுத்திரிங்களா! நீங்க சொன்னீங்களேன்னுதான் எல்லாத்தக்கும் ஒத்துக்கிட்டு வாறேன். ஒரு துண்டு கரும்பு கூட முண்டியடிச்சு வாங்க முடியாது! நானா குடுத்தாதான் உண்டு! நானா கட்னாதான் உண்டு! நீங்க கட்டி கொடுக்க முடியாது!'' என்றான் திண்டி!

திடீரென்று புழுதி மண்ணை கிளப்பிக்கிட்டு புழுதிக்குள்ளே இருந்து மண்ண கிளைச்சுக்கிட்டு கரும்பு கட்டுகளைத் தூக்கிட்டு பத்து ஆளு மேல வந்தாங்க! வரப்பு எல்லாம் ஆச்சரியம் தாங்க முடியாலெ. திண்டிப் பயல ரொம்ப சாதாரணமா நினச்சுப்புட்டம்ன்னு ரொம்ப பேருக்கு அன்னக்கி பயமே வந்தது. ஏதோ நாடகத்துல நடக்கிற மாறி இருந்தது. திபுதிபுன்னு கரும்பு கட்டு உளுந்தப்ப எந்திரிச்சு புழுதியில கட்டுவள தூக்கிக்கிட்டு பூமியிலேயிருந்து வெளிய வந்தவங்க - மறைஞ்சு போயிட்டாங்க! வாள் சுத்தியார் வூட்ல இருந்து ஆள் ஓடியாந்து ''வூட்டுப் பின்னால இருந்து அஞ்சி எருமைய யாரோ ஓட்டிக்கிட்டுப் போயிட்டாங்க'' அப்படின்னு தகவல் சொன்னாங்க. திண்டி லேசா சிரிச்சுக்கிட்டான். கமலம்பாளுக்கு இதையெல்லாம் பாக்க திகிலும், சந்தோஷமுமா இருந்தது. நம்ப முடியலெ! மெல்லத் திரும்பி திண்டியைப் பார்த்தாள். கூட்டத்தில் கரும்புக் கட்டுகளை ஆளுவ தூக்கி அடுக்குனானுவோ பெரிய பெரிய கட்டுகளாய் பத்து இருபது கட்டுகள். இரண்டு ஆளுவலாலும் ஒரு கட்ட தூக்க முடியாது. அவ்வளவு கனம். இதற்கிடையில் அங்கே நின்ற திண்டியும் காணும். ஜனங்கள் அல்லோல கல்லோகத்திலும் அவன் காணாமல் போனதையும் எல்லாரும் புரிந்து கொண்டார்கள்.

கூட்டம் பிரிந்தபோது எல்லோரிடமும் ஒரே கேள்வி, ஒரே பதில்: அப்ப யார் திருடுனது? கரும்பு கட்ட யார் ஒளிச்சது? நிச்சயமா எப்படி பூமிக்குள்ளேயிருந்து கரும்புக் கட்டு மேல வந்தது? யாருக்குத் தெரியும்! பெரிய ரகசியம்தான் அது! ஆனா திண்டி, பெரிய ஆள்தான்னு ஒரே நேரத்துல எல்லாரும் புரிஞ்சுக்கிட்டாங்க.

சொன்ன மாதிரியே கல்யாணம் கூடுச்சு. ஒரு வூட்ல இருந்து அரிசி, ஒரு வூட்லயிருந்து பாத்திரம், ஒரு வூட்டுலயிருந்து புளி, ஒரு வூட்லயிருந்து வூட்டுச்சாமான், பித்தளபாத்திரம், அப்படின்னு ஊரே பயந்துக்கிட்டு ஓடி வந்து பண்ற கல்யாணம்! அண்ணாமலை ரெட்டியாரும், வாள் சுத்தியாரும் முன்ன நின்னு நடத்துற கல்யாணம் கேக்கணுமா! எல்லாருக்கும் ஒரே சந்தோஷம்! ஏன்னா புலிவாய கட்ற மாதிரி வேலயல்லவா இது! கமலம்பாள் புலி வாயக் கட்டிருவாள். இனிமே இந்த பய திண்டி வாலாட்டவே முடியாது. இனிமே நம்ப, நம்ப சொத்துக்கு ஆபத்து இல்ல! அப்படின்னு எல்லாரும் ஒரு முட்டா சந்தோஷப்பட்டாங்க. ஆனா கல்யாணப் பொண்ணு மட்டும் விருமித்தி புடிச்ச மாறி உக்காந்திருந்தாள். கல்யாணம் நெருங்க நெருங்க எல்லா வேலையும் தானா நடந்தது. தாலி கூட தானா கட்டிக்குமோ என்னமோன்னு குசுகுசுன்னு எல்லாரும் பேசி சிரிச்சாங்க. ஆச்சு. டம டமன்னு மேளம் கொட்டி தாலிய கட்டி கமலம்பாள் வூட்டுக்குள்ள கூட்டிக்கிட்டு வந்தான் திண்டி! கல்யாணத் தன்னைக்கே அவன் பக்கத்தில உட்கார்ந்து அவன் சோறு திங்கிற வயணத்தைப் பாத்தே மயக்கம் அடிச்சு உழுந்தாளாம் கமலாம்பாப் பொண்ணு. ஒவ்வொரு சோத்து உருண்டையும் தேங்காய் தண்டி பெரிசு! ஒரு மனுசன் இவ்வளவு அகலமா வாய பொளப்பானான்னு பயமாயிருந்ததாம் அவளுக்கு!

திண்டி புத்திசாலியா, தந்திரசாலியா? பலவானா? ஒண்ணும் தெரியல! கல்யாணம் ஆன இரண்டாம் நாளிலயிருந்து எல்லாரு மாதிரியும் புது மாப்பிள்ளை கருக்கு கலையாமல் சரிகைத் துப்பட்டா ஒன்றை தோளைச் சுற்றி வீசியபடி வாய் நிறைய வெற்றிலையும், சிவப்புமாய் அலங்காரமாய் ஊரைச் சுற்றி வளைய வந்தான். ரெண்டு மூன்று நாளாய் யார் வீட்டிலயும் திருட்டு இல்லை. ஒரு வயலிலும் அழிமானம் இல்லை. தோட்டம், துறவு வயல், வாய்க்கால், எங்கும் ஒரு சேதாரமும் இல்லை. எல்லாருக்கும் பரம நிம்மதி! கமலம்பாள் நன்றாகவே கட்டிப் போட்டு விட்டாள். இனிமே பயலால ஒன்னும் பண்ண முடியாது. ஆப்பு சொருகிவிட்டாள். பய இன்னமே நிண்ட முடியாது. வெளிய முடியாது! என்று சந்தோஷமாக தெருவில் ஜனங்கள் பேசி புழங்கினார்கள். ராத்திரியில் பயம் இல்லாமல் தாயக்கட்டை விளையாடினார்கள். எங்கு வேண்டுமானாலும் இஷ்டம்போல் படுத்துத் தூங்கினார்கள்.

அவ்வளவுதான்! அடுத்த நாள் இரவில் நெடுங்கரை அய்யர் சேனைக்கிழங்கு கொல்லையில் விளைந்து இருந்த நூற்று ஐம்பது மணு கருணைக்கிழங்கு திடீரென்று மாயமாய் மறையலுற்றது. அதே நேரத்தில் அண்ணாமலை ரெட்டியாரின் மாந்தோப்பில் லாரியில் ஏற்ற, குவித்து வைத்திருந்த பத்து மூட்டு மாம்பழங்கள் திடீரென்று மின்னல் என மறைந்து போயின. ராயர் வீட்டு வாழைக் கொல்லையில் இருந்த தேறிய வாழைக்குலைகள் முன்னூறும் கேட்பாரற்று காணாமல் போய்விட்டன. அடுத்த நாள் ஊரே அல்லோல கல்லோலப்பட்டது. எல்லோருக்கும் திருடனுக்கு தேள் கொட்டியது போல் இருந்தது. ஆனால் இங்க ஊர் பூராவும் திருடனாக முழித்தார்கள். திண்டி! அவர்களுக்கு மத்தியில் கனவான் போல் உலவினான். இப்போது அவனுடன் கூடச் சிரிக்க கமலம்பாளும் இருந்தாள். வீட்டுக்குள் உக்காந்து இருவருமாய் நன்றாய் சிரித்தார்கள். கமலம்பாள் இப்போது புருஷன் பக்கம் இல்லையா? ஊர் கூடி சண்டையிட வந்தாலும், தேர் ஏறிச் சண்டையிட தயாராக இருந்தாள். இப்பொழுது அவளுக்கு அவன் திருட்டெல்லாம் திருட்டாகவே படவில்லை. ''அதெல்லாம் அவர் சமார்த்தியம், தெம்பும், திராணியும் இருக்கிறவங்க மடக்கிப் புடிக்க வேண்டியதுதானே? யார் வேண்டான்னாங்க?'' என்பாள். ஊர் ஜனங்க மறுபடியும் திண்டாட ஆரம்பிச்சாங்க.

திடீர்னு ஊர் பஞ்சாயத்து கூடுவதற்கு தண்டோரப் போட்டாங்க. பத்து பேர் திண்டிமேல பிராது கொடுத்தாங்க. பத்து பேர் திண்டிய பின்கட்டா கையக்கட்டி, காலக்கட்டி ஊர் சவுக்கண்டி முன்னால இழுத்துக்கிட்டு வந்து நிறுத்துனாங்க. எல்லாம் வாள் சுத்தியாரு வேலைதான். கொஞ்சம் கூட கவலைப்படாம சிரிச்சு கிட்டே எல்லாருக்கும் மத்தியிலயும் எகத்தாளமா நின்னான் திண்டி! சவுக்கண்டி மேடையில மராட்டி ராயர் நீதிபதியா உக்காந்தார். இரண்டு பக்கமும் ஊர் பெரிய பணக்காரங்க வரிசையா உக்காந்தாங்க.

சவுக்கண்டி முன்னால பிராது கொடுத்தவனுங்க பத்து பேர் நின்னு குய்யோ முறையோன்னு கூச்சப் போட்டானுவோ, ஊர் ஜனமே அப்படியே திண்டிக்கு நேரா கைய நீட்டி குடியே முழுகுன மாதிரி சத்தம் போட்டாங்க ''கொல்லணும் கொல்லணும்'' ன்னு கத்தினாங்க. கடைசில தீர்ப்பு வாள் சுத்தியார் ராயர் காதக் கடிச்சாரு. ராயர் தீர்ப்புச் சொன்னார். ''ஊருக்கே வெஷமா போன இவன மாறுகால் மாறுகை வாங்கி ஊருக்கு மத்தியில சூலத்திலே குத்தி ஊர்க்கு வெளியே நட்டு வைக்கணும்'' என்று சொன்னதும் கூட்டத்தில் இருந்த கமலம்பாள் ''கோ!'' என்று கத்தி தலையில் அடித்துக் கொண்டு ''நீங்க விளங்குவீங்களா! இந்த ஊர் உருப்படுமா?'' என்று கதறியபடியே மண்ணை வாரித் தூற்றி கீழே விழுந்து புரண்டாள். ஆனா திண்டி சிரிச்சுக்கிட்டே நின்னான். ''ஓ மேல ஆன சாட்டுதலுக்கெல்லாம் எல திண்டி! என்னடா பதில் வயனம் வச்சியிருக்கே? தப்பிச்சிறலாம்ன்னு மட்டும் ரோசிச்சிட்டாத!'' என்றார் அண்ணாமலை ரெட்டியார். கையில காசு உள்ளதுவள்ளாம் என்னா செய்யுமுன்னு திண்டிக்கி தெரியாதா? கலகலன்னு சிரிச்சான். அப்புறமா ''வயனம் சொல்றேங்க'' என்று இப்படி ஆரம்பிச்சான் நீட்டமா!

''நான் எப்பவுமே ரொம்ப பேசுறவன் இல்லீங்க. தப்புன்னா யார் செஞ்சாலும் தப்புதான். நான் செஞ்சன்னு ஆனா ஒத்துக்க கூடாதுங்க! ஏன்னா ஒத்துக்கிட்டா ஊர் உலகத்தில இருக்கிற முக்காவாசி பேர் நாங்களும் திருடங்கதாங்க! அப்படின்னு ஒத்துக்கவேண்டி வரும். ஏன் மேல பத்துபேர் பிராது கொடுத்து இருக்கிறான். ஆனா அத நிரூபிக்கணுமில்லீங்க? அத இந்த ஊர்ல இருக்கிற ஆளுங்க மட்டுமல்ல எவன் வந்தாலும் முடியாது! இதோ வாள் கத்தியார் மாமா இருக்கார். பத்து ரூபாய்க்கு வேலை வாங்கிட்டு பரம்பரையா எம் பண்ணைக்காரன் எம் பண்ணைக்காரன்னு சொல்லி ஒன்னார் ரூவா கூலி கொடுக்கிறாரு. அது திருட்டு இல்லையா? கேட்டாக்கா அதாண்டா வழக்கங்கிறீங்க! அண்ணாமலை ரெட்டியார் ஊர்ல உள்ள அத்தனை கோயிலுக்கும் தர்மகர்த்தா. அதப்பத்தியெல்லாம் நீங்க யார்ரா பேசிறது? அப்படிம்பீங்க. என்ன பத்தியும் யாரும் பேசாதீங்க! சாமி காசு, சாமி காசுன்னு வாங்கின காசுல்லாம் தர்ம காசா நெனைச்சிக்கிட்டு அவர் ஊட்டு பெட்டிக்குள்ள கொண்டு வச்சிக்கிடார்ல்ல? பணத்தையெல்லாம் யார் போய் திருடிக்கிட்டு வாறது? நான் திருடுறேன் நான் திருடுறேன்னு சொல்றியே? ஊர்ல எவந்தான் திருடல. நான் எல்லோரோட திருட்டயும் பாத்துக்கிட்டே இருக்கிறவன். ஆனா எந்திருட்ட நான் திருடுவேன்னு உங்களால நிரூபிக்க முடியாது.

''இவ்வளவு நாள் ஒங்களோட ஒரு விளையாட்டுதான் விளையாடிப் பார்த்தேன். அறுபது கட்டு கரும்பு பூமிக்குள்ளேயிருந்து வெளிய வந்ததே பார்த்தீங்களே; இப்ப விலங்குச் சங்கிலி திராவகத்துல உருகி அறுந்து உளுவப் போறத பாருங்க'' என்று கத்தியபடியே கையிலிருந்த விலங்கை கழத்தி கீழே எறிந்தான். விலங்கு திராவகத்தில் நனைந்து உருகி திகுதிகு என்று எரிந்தது. பஞ்சாயத்துக்கு உட்கார்ந்திருந்த ஜனங்கெல்லாம் வேகமாக பீதியுடன் ஒரு

மட்டாக எழுந்து குறுக்கும் மறுக்குமா ஓடினார்கள். பாவம் விலங்கு பற்றி எரிவதை அவர்கள் பார்த்ததே இல்லை. அவர்கள் மட்டுமல்லாமல் மந்திரம் போட்டதுபோல் பஞ்சாயத்தில் உட்கார்ந்திருந்த அத்தனை பேரும் திடுக்கிட்டு எழுந்து வெட வெடத்துப் போனார்கள். இரும்பு எரியுமா? அதைவிட திண்டி சொன்ன வார்த்தைகள் நெருப்பாய் எல்லாரையும் சுட்டுக் கொண்டு இருந்தன. கையில் மறைத்து வைத்திருந்த சிறிய திராவக குப்பி ஒன்றிலிருந்து திராவகத்தை கால்களிலிருந்த சங்கிலியின் மீது காலில் படாமல் ஊற்றினான் திண்டி! திகுதிகு என்று இரும்புச் சங்கிலி உருகி எரிந்து கொப்பளித்து உருகி அறுந்துபோய் விழுந்து விலகி உடனே கூட்டத்தின் அமளியில் திண்டி கலைந்து போய்விடுவான் என்று எண்ணிய நாலு முண்டர்களும் அவனை வளைத்துப் பிடிக்க முயல்வார்கள் என்று முன்னமே யூகித்த திண்டி பாய்ந்து பஞ்சாய்த்து சவுக்கண்டியின் மேடை மேல் ஏறினான். கூட்டம் இங்கும் அங்குமாக பரவி தள்ளாடியது. ஏன் என்றே தெரியவில்லை. கூட்டத்திற்கு ஆவேசம் வந்து விட்டது. குறிப்பாக பெண்கள் பகுதியில் அவனுக்கு பிரிந்து வழி விட்டார்கள். அண்ணாமலை ரெட்டியாரும் வாள் சுத்தியாரும், வேகமாக தடியுடன் ஆட்களை அழைத்து வந்தார்கள். கூட்டத்து இடையே பெண்கள் பிளந்து கொடுத்த பாதையில் பாய்ந்தான் திண்டி! சொல்லி வைத்தாற்போல் திண்டியை அப்படியே மூடி விட்டார்கள். அவர்களுக்குச் சொல்லித் தர வேண்டுமா என்ன? அவர்கள் வளர்த்த பிள்ளை அவன்? அவனைக் காப்பாற்றுவது என்பது சொல்லாமலே நடக்கும் காரியம். குண்டர்களால் பெண்களுக்குள்ளே புகுந்து போக முடியவில்லை. கும்பலாக கூடியிருந்த கூட்டத்தில் நுழைந்து செல்ல தடிகளை பிரயோகப் படுத்தியபோது பெண்கள் சிதறி ஓடினார்கள். கும்பலாக திரண்ட பெண்களுக்குள்ளே மறைந்து போன திண்டியைக் காணவே முடியவில்லை. பெண்களின் சேலைக்குள்ளே மறைந்து போய்விட்டான். பத்து, பத்து பேர்களாக ஒவ்வொரு தடியனையும் மயிரைப் பிடித்து இழுத்து கீழே போட்டார்கள். சிலர் மிதித்தார்கள். சிலர் துவைத்தார்கள். இதெல்லாம் சொல்லாமலே நடந்தது! ஆண்கள் பகுதியிலிருந்து திமுதிமு என்று ஆண்களும் ஓட்டத்தில் கலந்து கொண்டார்கள். யாருக்கும் எதுவும் புரியவில்லை. ஊர் பெரிய பணக்காரர்கள் திட்டங்கள் எல்லாம் குப்புற மண்ணில் விழுந்து சிதறின. திரும்பவும் திண்டியைப் பிடிப்பது என்பது லேசான காரியம் அல்ல என்று எல்லோருக்குமே தோன்றியது.

திண்டி ஒரு மின்னல் மின்னி மீண்டும் மறைந்து போனான். அதற்குப்பின் கொஞ்ச நாளில் திண்டியை ஊர்க்காரர்கள் முனைந்தபோது திண்டி இப்போது கிராமம் கிராமமாக அதே காரியத்தை ஆரம்பித்து விட்டான். எங்கு பார்த்தாலும் திண்டியின் சாமார்த்தியங்கள் வெளித்தெரிய ஆரம்பித்தன. அந்த ஊரிலிருந்து ஒரு பொட்டு தேங்காய் கூட அவன் திருடுவதில்லை. சுத்துப்பட்டி கிராமங்களில் நூறு நூற்று ஐம்பது ஊர்களில் திண்டி திடீரென்று பிரபலமாகிப் போனான். ஊர்க்காரர்களுக்குப் பரம திருப்தி. ஒரு மாடு கன்னு காணாம போறதில்ல. ஒரு கட்டு கரும்பு கூட மின்னலா மறையிறது இல்ல. யார் வீட்டு

கொல்லையிலயும் வாழைத்தாரெல்லாம் பழுத்து தொங்கினது கூட காணாப் போறது இல்லெ. குமியல் குமியலா காய்கறி லாரியில் ஏறினாக்கூட எதுவும் ஒன்றும் ஆகிறது இல்லெ, பத்திரமாயிருக்கு. ஊர்க்காரங்கள்ள அண்ணாமலை ரெட்டியாருக்கும், வாள் சுத்தியாருக்கும் ரொம்ப பெருமை, மூக்கு மேல பெருமை. நம்ப ஊர் பய என்ன 'விளையாட்டு' காட்ரான் பாத்தியா? ஒரு பயலாலயும் புடிக்க முடியல! பாத்தியா எல்லாருக்கும் தண்ணி காட்றானே நம்ப திண்டி! எவ்வளவு ரூபா எவ்வளவு காசு நம்ப ஊருக்குள்ள கட்டுமானமா அவன் வச்சிருக்கம்னுட்டு வயித்தெரிச்சல்ங்கிற? என்னா கெப்புறு என்னா துமுறு? என்னா கெப்புறு என்னா துமுறு? அவன் பொண்டாட்டி கமலம்பாள புடிச்சுக் குடுங்கடான்னு கேக்கிறானுவோ! நம்ப புடிச்சுக் கொடுக்க முடியுமா? நம்ம ஊரு ராக்காசி அம்மனுக்கு நகை மட்டும் எண்ணூறு பவுனுக்கு சாத்தியிருக்கான் திண்டி! சும்மாவா? ஊர் பொதுவான பணத்துக்கு நிறைய கொடுத்துருக்கான். ஆனால் எப்ப வர்றான்? எப்ப போறான்னு மட்டும் தெரியலெ! ராஸ்கோல்!'' அவன் பொண்டாட்டிக்காரி கமலம்பாள பாத்தா இப்ப வாள் சுத்தியாரு இப்படித்தான் கேக்கிறாராம்.

''என்ன கமலம்பா ஊர் பொதுக்காரியம், ஒம் புருஷன பாக்க வரணும்; எப்ப பாக்கலாம்! கொஞ்சம் பணத் தேவை இருக்கு ஒரு பத்து, ஐம்பது ஆயிரம் வேணும். ராக்காசி அம்மன் கோயில் திருவிழாக் காரியம். தம்பிதான் வேணும். ராக்காட்சி அம்மன் கோயில் திருவிழாக் காரியம். தம்பிதான் வரணுமா? இல்லெ ஒங்கிட்டயே வாங்கிக்கலாமா?'' அதுக்கு ''என்ன மாமா, ஒங்க பணம் வேறயா எங்க பணம் வேறயா?'' என்றாள் கமலம்பாள்.

(சுபமங்களா - அக்டோபர் 95)

